# இயானின் நடை

## ஆட்டிசம் பற்றிய ஒரு கதை

லாரி லியர்ஸ், தமிழில்- சபேசன் மருதப்பா,

படங்கள்- கேரன் ரிட்ஸ்



இன்று பூங்காவிற்கு எனது சகோதரி தாராவுடன் சென்று வாத்துகளுக்கு தீவனம் கொடுப்பதற்கு உகந்த நாள். ஆனால், எனது சகோதரன் இயனும் என்னுடன் வர விரும்புகிறான் .

“ஆ இயன் நீ ஏன் இங்கேயே இருக்க கூடாது” என்றேன். அவன் எனக்கு பதில் தரவில்லை,ஆனால் கைகளை திரைசீலை துணியில் உரசிக்கொண்டே சினுங்க ஆரம்பித்தான். ஏனென்றால் அவனுக்கு ஆட்டிசம் இருக்கிறது.

“சரி, பரவாயில்லை இயன்” என்று கூறி விட்டு அம்மாவிடம் “அவன் எங்களுடன் வரட்டுமா?” என்றேன்.

”ம்ம்... ஆனால் அவனை பத்திரமாக கவனிக்க வேண்டும், உன்னால் முடியுமா” என்றாள் .நான் “சரி பாத்துப்பேன்.” என்றேன்.

தாராவும் ஒத்து கொண்டு தலையை ஆட்டிக்கொண்டே என்னிடம் கூறினாள் “ஜூலி, எதற்கும் அவன் கையை பிடித்துக்கொள்” என்றாள்.



இயானின் மூளை மற்றவர்களது போல் வேலை செய்வதில்லை .அவன் எதையும் வித்தியாசமாகவே பார்க்கிறான் நாங்கள் நானினுடைய சாப்பாட்டுக்கடையை தாண்டிச்செல்லும்போது இயான் கடையின் உள்ளே போய் அங்கு உள்ளே உச்சியில் மெல்ல சுழன்று கொண்டிருந்த மின்விசிறியையே கவனிக்க ஆரம்பித்தான்.

சாப்பாடு பரிமாறும் பெண் சாண்டிவிச் ,ஐஸ்கிரீம் ,பாஸ்தா எடுத்துக்கொண்டு வேக வேகமாக அங்கும் இங்கும் சென்றுகொண்டிருந்தது அவன் பார்வையிலேயே படவில்லை. நாம் ஒரு சோடா வாங்கலாம் என்றேன் நான் கடைக்கு வெளியே அவனை இழுத்து வரும்வரை இயானின் கண்கள் மின்விசிறி மேலேயே இருந்தது.






இயான் ஒலிகளை கேட்பதும் வித்தியாசமாகத்தான். ஒரு தீயணைப்பு வண்டி சைரன் அலற அலற சென்றாலும் இயான் கவனத்திற்கு அது வருவதே இல்லை. ஆனால் அவன் தன் தலையை பக்கவாட்டில் சாய்த்து எனக்கு கேட்காத ஏதோ ஒரு சப்தத்தை உன்னிப்பா கவனிப்பான். அவனது கையை பிடித்து இழுத்துக்கொண்டே சீக்கிரம் என்றேன்.

இயான் மூக்கினால் முகர்வதும் வித்தியாசமாகத்தான். பாட்டரின் பூ கொத்து விற்பனை கடையில் மிகவும் மணமுள்ள லிலாக் பூ கொத்தை முகத்திற்கு நேரே நீட்டினேன். அவன் மூக்கை சுழித்துக்கொண்டே திரும்பிவிட்டான்.

ஆனால் தபால் அலுவலகம் வழியாக சென்றபோது மூக்கை சூடான , சொரசொரப்பான செங்கல் மேல் வைத்து நுகர்கிறான் நான் உடனே “ நிறுத்து;நிறுத்து” “இப்படி சிறுபிள்ளை தனமாக செய்வாயா !என்று கூறியபடியே யாரும் கவனிப்பதற்குமுன் அவனை இழுத்து சென்றேன்.





இயான் உணர்வதும் வித்தியாசமாகத்தான். நீர் குட்டையின் அருகே லேசான சிறகுகளை எடுத்து அவன் கன்னத்திற்கு அருகில் கொண்டு சென்று கிச்சு கிச்சு மூட்டினேன் கீச்சிட்டுக்கொண்டு தள்ளிவிட்டான்.

தாராவும் நானும் வாத்துகளுக்கு தானியம் தூவிக்கொண்டிருந்தபோது இயான் தரையில் படுத்துக்கொண்டு கன்னத்தை கடினமான கற்களின் மேல் அழுத்தி வைத்து படுத்துக் கொண்டான்.

அவனது கையை பிடித்துக்கொண்டு “எழுந்திரு யாராவது உன் மேல் கால் வைத்து நடந்துவிட போகிறார்களா” என்றேன்.




இயான் சுவைப்பதும் வித்தியாசமாகத்தான். உணவு கடைகளை கடந்து செல்லும்போது இயான் பிஸ்ஸாவையோ, ஹாட் டாக் அல்லது மிருதுவான ப்ரிட்செல்லயோ கவனிக்கமாட்டான் அனால் எனதுபைக்குள் கைவிட்டு மீந்துவிட்ட தானியங்களை எடுப்பான்.

தாராவும் நானும் மதியம் சாப்பாட்டிற்கு தானியங்கள் சாப்பிடமாட்டோம் எங்களுடன் வா பீட்ஸா சாப்பிடலாம் என்றேன். அனால் அவன் கேட்க மாட்டான் பவர் பாப்பை ஒன்று ஒன்றாக சாப்பிடுவான்.

சில நேரங்களில் அவன் செயல் எனக்கு கோபத்தை வரவழைக்கும்.

“நீ இயானுடன் இரு ஜூலி; நான் பிட்ஸா வாங்கி வருகிறேன்” என்றாள் தாரா.

நான் பெஞ்சில் அவன் பக்கத்தில் அமர்ந்து காத்திருந்தேன் “என் அருகிலேயே உட்கார்” என்றேன். அனால் இயான் கைகளை தட்டிக்கொண்டே என்னை கவனிக்கவில்லை.





கடைசியில் கையில் இரண்டு பிட்ஸாக்களை எடுத்துக்கொண்டு தாரா வந்து சேர்ந்தாள். வந்தவுடன் இயான் எங்கே என்றாள் நான் உடனே இயான் நின்றிருந்த இடத்தை பார்த்தேன்.

அவனை அங்கு காணவில்லை; அவனை காணவில்லை என்றதும் ஒரு கணம் என்னால் அசையக்கூட முடியவில்லை
அடிவயிற்றில் பிசைகின்ற உணர்வு.



தாரா அருகில் இருந்த ஒரு பெண்ணிடம் ஓடி சென்று “நீல நிற சட்டை அணிந்த சிறுவனை நீங்கள் பார்த்தீர்களா” என்று கத்தினாள் அவள் இல்லை என்று தலை ஆட்டிவிட்டு சென்றாள்.

போகும்போதே “ஒருவேளை பார்க்கின் முறுப்பக்கம் நடந்து கொண்டு இருக்கும் பேஸ் பால் விளையாட்டை பார்த்துக்கொண்டு இருக்கிறானோ என்னவோ” என்றாள். ஆனால் அவனுக்கு பேஸ்பால் பிடிக்காதே.



ஒரு சின்னப்பெண்ணை தோளில் தூக்கியவண்ணம் ஒரு மனிதன் வந்து கொண்டிருந்தார் அவரிடம் “நீங்கள் ஒரு சிறுவனை கண்டீர்களா” என்று கேட்கும்போதே என் தொண்டை அடைத்தது. “நாங்கள் சிறுவர்களுக்கு கதை சொல்லும் இடத்திற்கு கதை கேட்க சென்றுகொண்டிருக்கிறோம், ஒருவேளை அவன் கதை கேட்டுக்கொண்டிருக்கிறானோ என்னவோ.”என்றார்.

ஆனால் அவனுக்கு கதைகள் என்றாலே பிடிக்காதே.



தாரா இயானை கண்டுபிடிக்க வேகமாக ஓடினாள்.நான் கண்களை மூடி இயான் சிந்திப்பது போன்று சிந்திக்க முயற்சித்தேன்.

இயானுக்கு பலூன் கடை மிகவும் பிடிக்கும். அந்த பெரிய எந்திரம் பலூன்களை ஹிஸ் என்ற சப்தத்துடன் ஊதவைத்து வண்ண மயமாக பெரிதாக்குவது அவனுக்கு பிடிக்கும்.

அவனுக்கு நீரூற்று பிடிக்கும். முகத்தை நீரூற்று அருகில் வைத்துக்கொண்டு நீர் கண்களுக்கு நேரே மிக அருகில் சப்தமிட்டு செல்வதை கவனித்தவாரே இருப்பான்.

திடீரென்று பூங்காவின் பழைய மணி அடிக்கத்துவங்கியது. உடனே எனக்கு இயானுக்கு இந்த மணிசப்தம் பிடிக்குமே என்பது நினைவுக்குவந்தது.

நான் முழு வேகத்தில் மணி இருக்குமிடத்திற்கு ஓடினேன், அங்கு இயான் மணியின் அடியில் படுத்துக்கொண்டு மணியின் நாக்கை முன்னும் பின்னும் அசைத்து கொண்டிருந்தான்.

நான் அவனுக்கு பிடிக்காது என்றாலும் கூட அவனை இறுக்கி அணைத்துக்கொண்டேன்.



ஊஞ்சல் அருகில் தாரா நிற்பதை கண்டு அவளை கூப்பிட்டேன். அவள் மூச்சிரைக்க ஓடிவந்து எங்கள் இருவரையும் சேர்த்து அப்படியே அணைத்துக்கொண்டாள்.



நான் இயானிடம் “நீ எப்படி விரும்புகின்றாயோ அப்படியே நடந்து வீட்டிற்கு போகலாம்” என்றேன்.

நாங்கள் நீர் குட்டை அருகில் நின்றோம் இயான் கற்களை எறிந்து விளையாடினான், பாதையினோரதில் அந்த கற்களை வரிசையாகவைத்தான் நான் அவன்முன் நின்றுகொண்டு அவன் விரல்களை யாரும் மிதிக்காமல் பார்த்துக்கொண்டேன்.





பாட்டர் பூக்கடையை கடந்து நேராக நாங்கள் தபால் அலுவலகம் சென்றோம். இயான் அவன் விரும்பியவாறு செங்கற்களை முகர்ந்தான்.

யார் பார்க்கிறார்கள் என்று நான் கவலை கொள்ளவில்லை.

அந்த மூலையை கடந்தபோது எனக்கு காதில் விழாத ஏதோஒரு சப்தத்தை இயான் கவனிக்கத்தொடங்கினான் நாங்கள் பொறுமையாக காத்திருந்தோம். நாங்களும் அந்த சப்தத்தை கேட்க முயற்சித்தோம்.





நேண் உணவகத்தில் நானும் இயானும் என் தலை சுற்றும்வரை மின் விசிறியை கவனித்தோம்.



வீட்டிற்கு வந்தபோது “நடை பயிற்சி நன்றாக இருந்தது இயான்” என்றேன். மின்னல் போல சட்டென்று இயான் என்னைப்பார்த்து சிரித்தான்.